

பிஸ்மில்லாஹி.

# அஸ்மாவுர் றஹ்மானிய்யா

என்னும்

ஹக்குபேரில் நூறு திருநாம முனஜாத்துமாலை.

இது,

திருநெல்வேலி ஜில்லா

சீவலப்பேரி சந்தைப்பேட்டை

தர்காவித்துவானாகிய

மகாகனம் "அமிர்தகவி"

ம.கா. ஷெய்கப்துல்காதிறு அவர்களால்

இயற்றப்பட்டு

ஷை புலவரவர்களின் பொருளுதவியாலேயே

மதுராஸ்

அமெரிக்கன் டைமண்ட் பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.

ஹிஜ்ரி 1333ஹூ றமலான்மீ

பிஸ்மில்லாஹி.

# அல்மாவுர் றஹுமானிய்யா

என்னும்

## ஹக்குபேரில் நூறு திருநாம முனாஜாத்துமாலை.

இது,

திருநெல்வேலி ஜில்லா

சீவலப்பேரி சந்தைப்பேட்டை

தர்காவித்துவானாகிய

மகாகனம் "அமிர்தகவி"

ம.கா. ஷெய்கப்துல்காதிறு அவர்களால்

இயற்றப்பட்டு

ஷை புலவரவர்களின் பொருளுதவியாலேயே

மதுராஸ்

அமெரிக்கன் டைமண்ட் பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.

ஹிஜ்ரி 1333வரு றமலான்மீ

பிஸ்மில்லாஹி.

# சிறப்புப்பாயிரங்கள்.

இது,

தென்பாண்டிமண்டலம், செவ்வல்மாநகரம்

மஹாவித்துவானும்

முஹம்மதிய பல உயர்தர கிரந்தக் கர்த்தாவுமாகிய

ஸ்ரீலஸ்ரீ

எம்.ஏ. நெயினு முகம்மதுப்பாவலரவர்களால்

இயற்றியது.

---

பஃறொடை வெண்பா.

பூம்புனல்சூழ் ஞாங்கர் புவிவான்ச ராசரமு
மோம்புங் கடவு ளொருநாறு—வாம்பெரிய
மோ தயத்திருமு ஞாத்து நம்மரிய
கோமான் முகம்மதருள் கொண்டிரந்து—தேமாங்
கனிக்குமடு பாகுக்குங் கன்னல்தே னுக்கும்
இனிக்குஞ் சுவையா மிசைகள்—குனிக்கும்பா
தாழிசையிற் பாடியரோ தந்தான்பொன் வண்டினங்க
ளேழிசையிற் பாடு மிளஞ்சோலை—சூழ்வனமும்
வானதிக்கு சான்றாக வந்துமரு தம்பாயும்
பானதியாந் தாம்ப்ர பருணியெனுந்—தேனதியும்
பார்த்த விடன்றோறும் பார்ப்புகளு டன்றிரியும்
ஆர்த்தநீர் வாத்துறுமாம் பற்குளமும்—போர்த்தவளச்
சந்தைப்பேட் டையுடையான் தர்காப் புலமைமிக
ழுந்த முடையான் அழகுடையான்—சிந்தா
மணிக்குநிகர் கையுடையான் மாணிக்கம் போலப்
பணிக்கும் புகழே படரும்—கணிக்கவல்லோர்
ஆராயு ஞானத்தி னுயிராநூ லானாலும்
பாரா யணம்பண் ணும் பாவலன்—சீராய
சற்குணத்து சன்மார்க்கன் சற்பாத்ரன் ஸம்பூர்ணன்
நற்குலத்து சற்புத்ரன் ஸம்மித்ரன்—பொற்குணத்தைத்
தேக்கு மமிர்தகவி ஷெய்கப்துல் காதிறெனும்
வாக்கிற் சிறந்தவித்து வான்.

---

# சிறப்புப்பாயிரங்கள்.

இது இந்நூலாசிரியர்க் காசிரியரும்,

தவுறு சைலமாலை முதலிய பிரபந்தக் கர்த்தாவுமாகிய

இராயபுரம், மஹாவித்துவான்

ஸ்ரீமத். தி. வீ. கந்தசாமி டாக்ட்ட ரவர்களாலியற்றியது.

---

நேரிசை யாசிரியப்பா.

பரிதிமுடி பொறுத்த பொன்மலை முதற்ற
நிறை மலைக்கணங்க ளறைமுளை யுலகத்து
அகாஞ் சான்ற தோற்றம் போல
யாக்கைவரு காட்டஞ் சூக்கும சரீரத்
திருநில நாப்பண் வருமுகம் மதுவாந்
தீர்க்க தரிசனத் தெய்வ கற்பகந்
திமிர மூடிய தீவழிபோக்கு வான்
பேரொளி கான்றெளிர் சூரியனாக
மக்கா முளைத்து மதினம் மேவநின்றி
தீனுல் இஸ்லாம் எனும்பெயர் நிறீஇத்
தழைக்குபு காட்டினர் தக்கால் யார்களே
நுபுவத்தே புனலாய் ஜிபுரீல் முகிலாய்ப்
பெய்யு மழைநீரே துய்ய குர்ஆனாய்
அஸ்ஹா புகளே யதனிலை குழையாய்
போற்று ஷரீஅத்தே பூமக ரந்தமாய்
ஞானமுந் தியானமு நளிர்காய்க் கனியாய்
திருவே நூறு திருநாமத்தின்
முனாஜாத்திஃதே முதிர்பழச் சுவையாய்த்
திரட்டிதீர் தமிழாற் றிருத்தகு தாழிசை
விருத்தப்பாவிற் பொருத்தமோ டழகெலாந்
திகழத்தந்தன னவனைக் கேண்மினோ
கருணைத் தாம்பிர பருணி யென்னும்
வெள்ளப் பெருநதி கொள்ளை முகம்வைத்து
பொற்குலை கிடந்தன நெற்குலை சாய்ந்த
மருதம் பாயு மாநீர்ப் பண்ணையும்
படுக்கும் கனிக்கிளை யடுக்கிளஞ் சோலையுங்
காவலிற் புடைசூழ் சீவலப்பேரி
சந்தைப் பேட்டை வந்தநற் புநிதன்
ஞானமுங் கல்வியு மோனமுற வாய்ந்து
சாலவு மடங்கு மேன்குண சீலன்-அதான்று
என்மன வியற்கை யெளிதிற் றெரிந்துப்
பொன்னிற் பழகும் பூரண நண்பன்-அதான்று
இசைக்கவி வாண ரெல்லாஞ் சிறக்க
ளசைக்கப் பாடு மபிர்த கவிஞன்
மாதிரு ஷெய்கு அப்துல்
காதிறென் றெங்குங் கமழ்புல வோனே.

---

பிஸ்மில்லா ஹிர்றஹ்மா நிர்றஹீம்.

இஃது

அஸ்மாவுர் றஹ்மானிய்யா பி. மக்பூலத்தே றப்பானிய்யா

என்னும்

# நூறு திருநாம முனஜாத்துமாலை.

---

காப்பு

## ஆசிரிய விருத்தம்.

[வாணுதி
திருவுருவாய்த் திரண்டெழுந்த முச்சுடராய்க் குலவிநின்று செகம்
கருவுருவாய் படைப்புண்ட சிருட்டியடங் கலுநிறைந்த கருணாநந்த
அருவுருவே நின்மீது முனஜாத்து வறைதற்கு அளவில்லாத
மருவுருவா நின்னருளைக் காப்பாக துதித்தென்றும் வாழ்த்துவாமே.

## நூல்.

சேந்தோடைத் தாழிசை விருத்தம்.

சொல்லற் கரிய பெரும்பொருளாய் துவர்க்கமு முடிவு மில்லாத
அல்லா கூவெனு நன்னுமத் தணிசேர் பரனே பரம்பரனே
வில்லா ருன்னொளி தனில்வந்த வேத முகம்ம தின்பொருட்டால்
எல்லாப் பிழையும் பொறுத்தாள்வா யிறையா றப்பில் ஆலமீனே. 1

மன்பதை யுலகி லெப்படைப்பு மாட்சி பெறவே கருணையெனும்
அன்பதைச் சொரியும் வள்ளலென ஆற்றும் மன்யா றகுமானே
முன்னுறுங் கற்களை சலமதனில் முழங்கி நடக்கச்செய்தநபி
தன்பெரும் பொருட்டா லிரட்சித்தாள் தயாளயாறப்பில் ஆலமீனே 2

கருணைக் கடலே பெரும் வாழ்வே காமில் ஹூமி னவர்க்கு
பெருகு மரிய கிருபைசெய் பெட்பின் பொருளே றஹீமுவே
திருவே மாறு குறைஷிக்குல தெய்வ முகம்ம தின்பொருட்டால்
மருளுடைப் பவமே பொறுத்தாள்வாய் மன்யாறப்பில் ...மன. 3

உலகம் பரவும் பொருளேயென் றுருகிவியற்றும் புன்மொழியே
அலீற வறியுந் தத்துவனாய் அமிதற் கடங்கா அம்மலிக்கே
நிலமீ துழுவை பணிகொள்ள நின்றமுகம்ம தின்பொருட்டால்
தொலையாப் பவமே பொறுத்தாள்வாய் ஜோதியாறப்பில் ஆலமீனே. 4

செய்கடன் முறையே தானியற்றித் திருவநெறிபெற் றிடற்கறியா
தையே விடைந்த னெல்லையிலா ஆதியாகுத் தூசியெனு
மெய்யவா நந்த நபிபொருட்டால் மெய்யிலா திழிவே யுறுநெஞ்சப்
பொய்யனேன் வினையே பொடிதல்செய் போற்றுயாறப்பில் ஆலமீனே.

அன்போடிணைத்தற் கறியாத அகத்தோர் தனையே அடைந்து சதா
துன்ப மடைந்த னன்சலாமே துணையோ டிணையு மில்லானே [ல்
என்பிற்றுருவை தனையழைத்த இறையாம் புறுக்கான் நபிபொருட்டா
அன்பா லென்பால் பவம்பொறுப்பாய் ஆதியாறப்பில் ஆலமீனே. 6

வேட்டே னினது திருவருளை விழலுக் கிரைத்த நீரனைய [ளை
மாட்டே னென்றன் துனிதீர்க்கும் மன்யா மூமீனு வெனும் பொரு
தேட்டம் பெறவே நின்றதரு திருவா யெவையு முரைத்தபுகழ்
கூட்ட லார்நபி பொருட்டாலே குறைதீர் றப்பில் ஆலமீனே. 7

பொய்யே நாவில் தினங்கொண்டு புலையே யுற்ற செய்கைபூண்டு
மெய்யே யறியா பாதகனை மீட்சி செய்யும் முஹைமினேயென் [வால்
றையே யடைந்தன் பவம் போக்கி அருளின் நபியார் பொருட்டது
துய்ய நிலமை பெருகவருள் சோதியா றப்பில் ஆலமீனே. 8

ஆர்க்கு மரிதா யரிதரிதா யணுவுக் கணுவா யப்பாலாய்
தீர்க்க நபிமார் முதல்வானோர் தேடிக் காணு யா அஸீஸே
மார்க்க நூறுன் நபிபொருட்டால் மலைபோ லான பாவமெலாம்
பார்க்குள் காணு தேகிடச்செய் பகர்யா றப்பில் ஆலமீனே. 9

ஆக்க லழித்த லொடு காத்த லாகுந் தொழின்மூன் றுடையனென
காக்கு மறையிற் கிடந்துபுவி காணற் காகா ஜப்பாரே
மோக்க மடையு நெறிவழியை மொழிந்த நபியார் பொருட்டாலே
யூக்க முற்றோய் பிழைபொறுப்பா யோதுயா றப்பில் ஆலமீனே. 10

பேதமுறு மெய்ப் போதமுடை பெட்பூர் புறுக்கா னுல்லவீமும்
வேத மதனின் சூறுவாம் வியன்சேர் தாஹா யாசீனை
யோதி மகிழ வினவசுரர் வுயர்சோபனஞ்சொ னுத்தமனே
நீதி நபிபொருட் டென்பிழையை நீக்குயா றப்பில் ஆலமீனே. 11

தீயகால் விலங்காம் பவப்பிணியை தீர்த்திட வொருவழி யறியாது
நாயகா விடைந்தன் றுணையில்லா நலனுடைமுத்தக் கப்பிறைவே
ஞாயமே யென்று மறைபோற்ற ஞாலமீ துதித்த முகம்மதுவாந்
தாயகர் பொருட்டால் பவம்பொறுப்பை தனியா றப்பில் ஆலமீனே.

ஞிமிர்தரு பரவைசூழுலகார் நிரைந்துள படைப்பெவையும் படைத்து
அமைவுறக் காக்கும் பொருளென்ன அறையுமோர் காலிக் காமாசே
உமிழ்தரு மணமே காதமுங்கு முச்சித முகம்மதின் பொருட்டால்
சிமிலம தொக்கும் பவம் பொறுத்தாள் தேவயா றப்பில் ஆலமீனே.

வேதப் பொருளாய்ப் பொருளொளியாய் விரிவாழ் கடல்சூ ழுலகனைத்
நீதப் பொருளாய் நிறைந்ததனி நிதியே பாரிவு வெனுந்தேவே [தும்
சோதி மயிலென முனநின்ற துங்க முகம்மது நபிபொருட்டால்
ஏத மகற்றி ரட்சித்தா ளிறையா றப்பில் ஆலமீனே. 14

அருளினை யளிக்கும் பெருங்கருணை ஆதியே அண்டமேழ்புவியும்
பொருளெனத் தோன்றி நின்றவனே புகழ்பல படர்ந்த முசவ்விறுவே
திருவொளி வதனத் திரண்டநபி தீட்சதர் பொருட்டு செய்பவமே
இருநிலத் தகற்றி ரட்சித்தாளிறையா றப்பில் ஆலமீனே. 15

ஆதரம் பெருக மனங்கவிந்து வைம்புல னொடுக்கி டும்மரிய
நீதமே யறியா துலகுழன்றன் நிருணயத் தேவே கப்பாரே
வேதநா யகமாய் நிலம்வந்த விகசித நபிபொருட் டென்பவமா
மேதமே யகற்றி ரட்சித்தா ளிறையா றப்பில் ஆலமீனே. 16

திக்கனைத் துடன்வான் செறிந்துள்ள செம்மைசேர் படைப்பை யடக்கியாள், கஹ்ஹா ரென்றபேர் பெற்றதிரு கருதருஞ் சின்மயப் பெருஞ்சுடரே, இக்கெனு மொழியா லொருத்தலொடு யினிய் மறை யை வசனித்த, மக்க முகம்மது வின்பொருட்டால் வளஞ்செய் றப்பில் ஆலமீனே. 17

துனிதனை யோட்டி யுதகைதருஞ் சோதியாய் சோதி யூடுலவு
நனியரும் பொருளே வஹ்ஹாபெனும் நாதனே நவிலு நான்மறையின்
கனிதனை யுண்டே யெங்கினிருந்த ஹாமீம் முகம்மத ரின்பொருட்டால்
இனிதரு ளிய்வை கருணையதால் இறையா றப்பில் ஆலமீனே. 18

பற்றற் றுன்னை வணங்கமனம் பற்று வடிய னெனினு மரு
ளுற்றற் புதமா றஸ்ஸாக்கே யோங்கு முனது வுயர்கருணை
பெற்றற் கறியா திடைந்தனந்தோ பெட்பார் முகம்மதின் பொருட்டா
இற்ற வெனது பிழைபொறுப்பா யுயர்யா றப்பில் ஆலமீனே. 19

உன்னு மடியர் மனத்திருளை யோட்டி ஞான வொளிவருளு
மன்னு னென்ன போற்றலுடை மாவே மூவாமன் பத்தாஹே
சொன்னோர் பெருகு மறைபுறுக்கான் துய்ய நபியார் பொருட்டாலே
இன்னே யென்பிழை தனைபொறுப்பை யிறையாறப்பில் ஆலமீனே. 20

கற்றநூன் முதலெற் றவத்தவருங் கறையிலாக் கடலெனு வேவறற்ற
வுற்றெவ் வுயிரி னுயிர்க்குயிராய் வுலவிவுறுநினை வையுணர்ந்த [மே
சொற்றரும் அலிமுவே நின்கபிபாங் துணைநபி பொருட்டா லென்பவ
இத்தரை காணு தாகிடச்செய் யிறையா றப்பில் ஆலமீனே. 21

சோபமுடைய வள்ளலென துயரே வுரைத்து தோத்திரித்து
சோபமுற்றன் காபிலுவே தொகுத்தற் காகா துயர்ந்தபுகழ்
சோப மதனி லுதித்தநபி துய்யர் பொருட்டா லென்பவமே
சோப மெனவே யாகிடினுந் துடைத்தாள் றப்பில் ஆலமீனே. 22

மின்னே ருலக வாழ்வதனை மேவி மாதர் வலைப்பட்டு
இன்னே விடைந்தன் பாசிதுவாம் இரணம்விரிதல் செயும்பொருளே
செந்நீர் பதுமஞ் சுவடுறுத செய்யிது முகம்மது நபிபொருட்டால்
தன்னங் தவிர்த்து ஆண்டருள்வை சர்வயா றப்பில் ஆலமீனே. 23

தர்க்கே யணைய னெனவுலகிற் றணிவே யிலாது மனமகிழ்ச்சி
பெருக்க மிகவே கொளுபவரை பெட்பாய் தாழ்த்துங் ஹாபிலென
வுருக்க மாக சொலும்பொருளே வுவமை யிலாவுன் னெளிபிரிந்த
திருக்க மலர்ப்புய நபியா லென்துகடீர் றப்பில் ஆலமீனே. 24

குற்றமே யணுகா தவத்தோரை கோப்பாயென்று மேயோங்கி
வற்றமே யில்லா வருசையில்சேர் வள்ளல் ரூபிஉ வெனவேநனி
கற்றமா பெரியர் சொற்பொருளே காமிது முகம்மதின் பொருட்டால்
சுற்றுமென் பவமே யகற்றியருள் சோதியா றப்பில் ஆலமீனே. 25

போதவா னந்த போகமீய்ந்து புந்தியி னிருளைப் போக்குஞ்சீர்
வேதமெய்ப் பொருளே முகிஸ்ஸியென விளங்கு நாம வித்தகனே
பேதமொன் றில்லா வொளிவான பெருமான் முகம்மது நபிபொருட்
நீதமா யெனைரட்சித்தாள் நிகரில் றப்பில் ஆலமீனே. [டால்

ஈனத் திவறு மனக்கொடியோ ரியற்றும் புன்மைகளனைவந்து
தானே யடையா தாக்கிடுவை சாற்றற் காகா முதில்லுவே
மோனத் தவர்தம் மகவிளக்கம் முகம்ம திறசூல் பொருட்டாலே
பீனப் பவமே துடைத்தருள்வை பெரியயா றப்பில் ஆலமீனே. 27

தன்னிக ரில்லா தலைவனெனச்சாற்றி சார்பவம் போக்கிடவே
யுன்னுவர்க் கருளுங் கருணையுடை யுயர்பர மான யாசமீஉ
பொன்னொளிர் கிந்திலெனநின்ற பூபர் முகம்ம தின்பொருட்டால்
என்பெரும் பவமே பொறுத்துரட்சி இலாகி றப்பில் ஆலமீனே. 28

கற்பனை முதலாஞ் சொற்பொருளோடு காரண காரியங் கடந்தொளி
சிற்பராநந்த வெளிநின்ற தேவ தேவே யாபஸிறே [ருஞ்
பொற்பெலாம் பொதிந்து புவிவந்த புண்ணிய முகம்மதின்பொருட்
எற்பவம் போக்கி ரட்சித்தா ளிலாகி றப்பில் ஆலமீனே. [டால்

ஊழியின் கால முன்னிருத்தி யோதரு நீதியாந்தீர்ப்பு
நீழலுற்றிடச்செய் கஹறுமேவே நின்னொளி பிரிந்து புவிவந்து
ஏழக மென்பா லுயிர்த்திடச்செய் யிறைநபிபொருட்டால் பவமெனு
பூழியே வகற்றி ரட்சித்தாள் போற்றுயாறப்பில் ஆலமீனே. [வன்

தனியே துயரில் வெம்பிமனஞ் சாம்பிவாழ்க்கைத் தளைபட்டிங்
கினியேது செய்வ மெனவேங்கி யிடைந்த னிதிசேர் யாஅத்லே
கனியாம் மறையே யுண்டதிரு காமிதுமுகம்ம தின்பொருட்டால்
துனியாம் பவமே பொறுத்தருள்வை சோதியாறப்பில் ஆலமீனே. 31

லத்தீபென்ன வறற்றியகம் நாணிக் கண்ணீர் தனைக் குயிற்றி
நித்தியமுந் துயருரைத்து நின்றுவிரக்கு விரப்பு தெரி
முத்தி முதலே முதற்பொருளே முகம்மதிறசூல் பொருட்டாலே
பத்தன் பிழையே பொறுத்தருள்வாய் பாரயாறப்பில் ஆலமீனே. 32

புகழே புகழின் புதுமணமே புலனூர்ந்தறியா வருங்குணமே
அகமே மலிந்த வற்புதமே அறிவானந்த யாக்கபீரே
இகலோகப் பயகாம்பரென்னு மிறசூல் முகம்மதின் பொருட்டால்
தகமைக் குடிலைத் திறந்தருள்வை சர்வயாறப்பில் ஆலமீனே. 33

துனியா விடையே யுதித்துகடுந் துயராம் பவமே செய்திடைந்து
இனியார்வேத வழிநடவா னெனினு மிறையாங் ஹலிமு வே
முனிவில் நபியார் பொருட்டாலே முழுதும் பாவ மகற்றிநனி
வினவு சுவர்க்க பலனருள்வாய் வேதயா றப்பில் ஆலமீனே. 34

வலிக்கே வளரும் விழிமாதர் வஞ்சவலையிற் பற்றிமன
மெலிவுற் றனன்யா கலிமுவே மெய்ப்பொருள் விளங்க மக்காநகர்
பொலிவுற் றுதித்த நந்நபியாம் புண்ணிய முகம்மதின் பொருட்டால்
மலிவுற் றெனது பிழைபொறுப்பாய் மன்யாறப்பில் ஆலமீனே. 35

இருட்பெரு மலர்தவிர்த்துனை வணங்க யிடங்கொளா மனத்தின ஞயிடினும், மருட்பெரு வஞ்ச பவம்பொறுத்தாள் மன்னவயா கபூரெ னும் பொருளே, தெருட்பெரு நபியா முகம்மதரின் திருவார் பொரு ட்டு அடியவர்சேர், பொருட்பெறு சுவர்க்க பலனீவாய் பொங்குயா றப்பில் ஆலமீனே, 36

அருகு நுனிதனில் நின்றபனி அளவாஞ் சலத்தை அகத்தமைத்து
சுருதி முதலா யெவ்வுறுப்புந் துணையாயீந்த ஷக்கூரே
மிருதி நபியார் பொருட்டாலே மீக்கொள் பவமதெலாம் பொறுத்து
அருமை இம்மை மும்மையிலும் அழகருள் றப்பில் ஆலமீனே. 37

நிலையிலா வுலகியற் படுமனத்தை நிறுத்திட வொருவழி யறியாது
வுலைந்தன னடிய னருளளித்தா ளுயர்தரு மறுத்தபா வோங்கலீய்யு
விலையிலா மணியாய் முனம்வீற்ற வித்தக நங்நபியின் பொருட்டால்
மலைவுறு வென்னை ரட்சித்தாள் மஹாயாறப்பில் ஆலமீனே. 38

வஞ்சமேசெறி தனத்தினரின் மயலால்வாடி நின்றிளைத்து
வென்செய்வோமென வேங்கிநின்ற யெனையாளுபர்ந்த யாமானிஉ
விஞ்சை மறைபுறுக் காணைப்பூ விளக்கிடவந்த மெய்ந்நபியின்
எஞ்சலிலா பொருட் டாலென்று மிலாகிறப்பில் ஆலமீனே. 39

செய்யுந்தொழிலே தீமையதைத் தேடிவாணுள் செலவழித்து
னையும் பெயரே தொண்டிடைந்த நாயே னெனினும் யாகபீலே
துய்ய அதுனன் குலத்துதித்த துங்க முகம்மது நபிபொருட்டால்
வெய்ய பவமே பொறுத்து ரட்சி மேதகு றப்பில் ஆலமீனே. 40

காக்கும் பொருளே யென்றென்றுங் கணிக்குங்கணிதத் தடங்காது
நோக்கும் பொருளே அடியவரை நுவல்யாமுஹித்து வெனுஞ்சோதி
மாக்கள் பவமே போக்கவந்த மன்னுன் முகம்மதின் பொருட்டால்
எக்கமுற்ற வென்னைரட்சி யிலாகி றப்பில் ஆலமீனே. 41

இம்மாநிலத்தில் மெய்யெடுத்த விந்நாள்வரையும் மெய்யறியா
தம்மாபடிற னெனவுலக ரறற்ற திரிந்தனன் யாகஸீபே
கொம்மைகொண்மூக்கவிகையுடைகுருவாம் முகம்மதின்பொருட்டால்
வெம்மை சேர்பவம் பொறுத்துரட்சி மேதகு றப்பில் ஆலமீனே. 42

தெரியா வகைசெய் பவமெண்ணில் தெரிந்தே செய்பாவ மதனினுமீ
முரிவாம்பவமே செய்தவெனை முடிவிலா ஜலீலே வொளிவிருந்து
விரிவாழ் கடல்சூழ் புவிவந்த வித்தக முகம்மதின் பொருட்டால்
பரிவாய் ரட்சித் தாண்டிடுவாய் பகர்யாறப்பில் ஆலமீனே. 43

வன்னார் கொடுமை மலநீக்க வகையே தெரியா வடியனுக்குன்
பொன்னார் மறையே யுணர்த்துமருட் போதப்பொருளே யாக்கறீமே
முன்னே யுன்னொளி தனிலுற்றமுருஸல் நபியார் பொருட்டாலே
இன்னல்செறியேன் பிழைபொறுப்பா யெழிலார்றப்பில் ஆலமீனே. 44

கல்லா நாயேனெனினு மெனைக்காக்கும் பொருள்நீ யன்றியிலை
சொல்லால் புறைய மிடுமறையில் துலங்குறகீபு வெனும்பரனே
பல்லோர் புகழ துர்றத்துல் பைலா வான முகம்மதரின்
வில்லார் பொருட்டென் பிழைபொறுப்பாய் மேதகுறப்பில் ஆலமீனே.

கோட்ட மகற்றி தினமுமனங் குவிந்து வணங்கா கொடியேனின்
வாட்ட மகற்றி வேட்டுநனி வரமே யருளும் யாமுஜீபே
தீட்டற்கரிய பெரும்புகழின் திருவார்முகம்ம தின்பொருட்டால்
காட்சியுற்றென் பிழைபொறுப்பாய் ஹக்குயாறப்பில் ஆலமீனே. 46

ஊணை யுடையே பொருளேயென் றுருகி நெஞ்ச மிகவுடைந்து
வீணை துயரத் தழுந்துபவர் வெறுமைதீர்க்கும் வாசிஉவே
சேணை யிருந்து புவியதனில் திமிரப் படலம் போக்கவந்த
மாணார் நபியின் பொருட்டாலே மகிழீ றப்பில் ஆலமீனே, 47

வேதநபிமார் முதனுலகோர் வேண்டும் பொருளாய் நின்றுவுயர்
நீதமருளும் நித்தியனே நிகரில் ஹகீமு வெனுமுதலே
ஆதவனோடுரை புரிந்ததிரு அண்ணல்முகம்ம தின்பொருட்டால்
மேத கந்தங் தாட்சிபுரி மேதகு றப்பில் ஆலமீனே. 48

ஆசிப் புடைய பரம் பொருளே அன்பாகத்து வென்றுநனி
பூசிப் புடைய பெம்மானே புகலற் காகா யாவதுதே
தூசிப் பனைய நாயினனை தூதர் முகம்ம தின்பொருட்டால்
பாசிப் பனைய பவம்பொறுத்தாள் பகர்யா றப்பில் ஆலமீனே. 49

கயவரில்லிடை கலங்கிமனம் கணமே நின்றி டாவாமே
தயவாய் தந்து ரட்சித்தாள் சர்வ வல்லப யாமஜீதே
இயமது தண்டா தேயிடுநல் லிறைநபிமுகம்மத ரின்பொருட்டால்
துயருடைப் பவம்பொறுத்தென் றுமேசீர் சோதியாறப்பில் ஆலமீனே

பிறந்த பல்லுயிரின் மனத்துறைந்து பேசருங் கருணை யேவிளைத்து
இறந்தவர்தமையே வெழுப்புமுயரெழிற்பெரு பா இதுவெனமறையில்
சிறந்தநற் பெயரே பூண்டவா நுந் திருவளர் நபிபொருட்டதனாலே
மறந்திகழ் பவமே பொறுத்தருள்வை மன்யா றப்பில் ஆலமீனே 51

உன்னுமறிவா யறிவொளிவா யொளிவி னுலவு பரமாகி
யென்னில்நின்று நனியெவையு மினிதாயோர்ந்த வின்ஷகீதே
இன்னலுடை துரு வைதுனிய யேகக்கருணை செய்தநபி
தன்பெரும் பொருட்டு ரட்சித்தாள் சாற்றுபா றப்பில் ஆலமீனே 52

கடையேன் வஞ்சநெஞ்சத்தாற் கழறுகின்றேற நின்கருணை
அடையேன் யெங்குந் தன்மயமா யமர்ந்தஹக்கு வாம்பொருளே
இடைத லுற்ற நவ்விதனை யினத்தோ டேகச் செய்தநபி
வடிதற் கருணை பொருட்டெனையாள் வண்யா றப்பில் ஆலமீனே 53

தீராத் துயரக் கடலழுந்தி தியங்கி நாளு மழுதேங்கி
நீரே தாரை யெனக்குயிற்றி நின்ற வெனக்கு யாவக்கிலே
சீரே பெருக குசைனறபி திருமுன் புத்தை பேசிடச்செய்
காரே கவிகை நபிபொருட்டால் கனமீ றப்பில் ஆலமீனே 54

என்று மறிவை யிகலித்து இருளாம் போர்வை தனைப்போர்த்து
நின்ற வென்றன் மருடீர்ப்பை நிதியாங் கவிய்யு வெனுமிறைவே
மன்று ளென்றும் புகழ்நிலவ மடமா தூமை தனை வேதம்
பொன்ற துரைக்கச் செயுநபியால் பொருவில் றப்பில் ஆலமீனே 55

உலகறி வென்னைத் தொடர்ந்தமுத லுனையே வணங்கி யறியாது
அலைந்தன னடிய னெவ்வுயிர்க்கும் ஆதா மான யாமத்தீனே
பல்லுடையீந்தைக் கல்லிருந்து பண்பா யழைத்த நபிபொருட்டால்
மலைவுறு பவமே பொறுத்தருள்வை மன்யாறப்பில் ஆலமீனே. 56

துடராம் பற்றைத் தவிர்த்துநின்ற தொண்டர்க்கன்பு வைத்திடுமோர்
சுடராஞ் சோதித் திருநாம துய்ய வலிய்யு வெனும்பரனே
விடமே வைத்து பொறித்தகறி வினவும் நபியார் பொருட்டாலே
அடமேம் பவமே பொறுத்தாள்வை ஆதிபாறப்பில் ஆலமீனே. 57

கருணை வழிந்து அகம்புறமுங் கனிவாய் பொழிதருங் கடவுளாய
பொருணிறைந்த மறைமுதலே பொருவில் ஹமீதெனும் புண்ணியனே
இருமை ஞானவிளக்கான எங்கள் முகம்மது நபிபொருட்டால்
அருளீந் தென்றும் ரட்சித்தாள் அஹதுபாறப்பில் ஆலமீனே. 58

போற்றுனெனினுங் கருணைகொண்டு பொறுத்திடல்வேண்டும் புவியகத்துட், டோற்று தொளிர்ந்துன் னுவையோர்ந்த துய்யமுன் தக்கீமு வெனுமிறைவே, யூற்றேவிரலிடை பொங்கிடச்செய் யுயர்நபி பொருட்டால் பவமெல்லா, நூற்றல் செய்தரு ளெந்நாளும் நுவல்யா றப்பில் ஆலமீனே. 59

தோற்றும் படைப்பு பலபடைத்து துணைக்கா ரணமாம் பொருளளித்து
போற்றல் செய்யு முப்திவுவாம் பொருவில் மூவா புண்ணியனே
தூற்ற லர்ர்வசை கவிதனேயே தொகுப்பா யேற்ற நபிபெருமான்
ஆற்றல் பொருட்டென் பவம் பொறுப்பை அனகயாறப்பில் ஆலமீனே.

வாயூரத்தே மாமலரால் வாழ்த்தத் தெவுட்டாது வாய்மணக்குந்
தாயேகொடிய னேக்கருணை தயைசேர் மீட்சி தருமூசதே
கேயூ ரஞ்சேர் நபிமுகம்மத் கிருபையதனு லென்பவமே
மாயச்செய்துன் றிருவருள்செய் மன்யாறப்பில் ஆலமீனே 61

உனேயே வணங்கப்போகிறனென் றுரைத்து வடுத்த தெருவிருக்கும்
மனேயே நுழைந்த படிறனேயாள் மன்யா மூகிய்யி வெனும்பொருளே
முனமே நின்று விறுதிவந்த முகம்மது நங்நபி யவர்களின்சீர்
நினேதற்பொருட்டுல கெலாமுணர்ந்த நிதியாறப்பில் ஆலமீனே. 62

காவாகடனேே யுனக்கென்றேன் கபடநிறைந்த கொடுநெஞ்சேன்
பூவார் பொருந்து முயிர்யாவும் பொடிதல் செய்யா முமீத்து வென
மாவார் பெயரே கொண்டதிரு மன்னுன் நபிபொருட் டென்பவமே
நீவால் செய்துமே மகிமையருள் நீதியா றப்பில் ஆலமீனே. 63

ஒளிவா மொளிவிலொளி யொளிவே யுருவாமுருவா லுருவுருவே
தெளிவாந்தெளிவில் தெளிதெளிவே திருவாம்ஹயாத்துநிறைந்தஹை
நளிவாங் களிகை முகம்மதால் நவமே யிலாவென் பவம்போக்கி [யூ
மிளியே பெருகு சுவனமருள் மேதகுறப்பில் ஆலமீனே. 64

ஒருநூற் றைம்ப தாறிலக்க மூறைந்த இசுமு கைய்யுமுவாந்
திருவுற் றென்றும் நிலேபாடாய் செகமேயுற்ற வல்லானே
முருகுற் றெளிரு மெய்மையராம் முகம்ம திறசூல் பொருட்டாலே
மருளூற்றிடு வென்புவம் பொறுப்பை மன்யாறப்பில் ஆலமீனே. 65

மட்டுப்படுத்து மகாபூரி மகியே மடங்கா மாக்கொடையே
இட்டமுடனே பொழியுமரு ளிறையே வாஜீது வெனும்பொருளே
கெட்ட இபுலீஸ் வஞ்சனேக்குக் கீழ்ப்படாது முகம்மதுவாம்
பெட்பர்பொருட்டென்பவம் பொறுப்பைபெருமையாறப்பில்ஆலமீனே.

அண்டங் கடந்து வெளிகடந்து அறுசும் கடந்து அது வதுவாய்
நின்ற சாகிபே புஷறக்காம் நிதியா மாஜீ தெனும்பரனே
விண்டு வதனற் பொதும்பதனில் விரிவாழ் கடலோடு வங்கமதை
பண்டு வழைநபி யார்பொருட்டு பலனீ றப்பில் ஆலமீனே. 67

தானே தானுய் தான்றனியாய் தனித்துநிறைந்த தாத்தாகி
வானோர்பெறவே நின்றதிரு வாஹி தென்னும் வண்பொருளே
தீனேரிசுலாந் தனைவளர்த்த செய்யிதிறசூல் நபிபொருட்டால்
ஈனப்பிழையே பொறுத்தருள்வா யிறையாறப்பில் ஆலமீனே. 68

ஏகாநேக னெனநின்று யோகச் செங்கோ லியற்றுவனுய்
நீகாசம்மில் யாஅகதே நினைவின் படிக்குன் னபிபொருட்டால்
போகாபோகந் தருசுவர்க்க பொன்னு டதனில் பெனைச்சேர்த்து
வாகு பெறநுந் தீதாரருள் வண்யாறப்பில் ஆலமீனே. 69

உவமை கடந்து தவங்கடந்து வொளிரறிவையுங் கடந்துஞான
நவமும் பதமுங் கடந்தளவை நண்ணு தொளிரும் யாசமதே
புவனமதிலட ரிருள்பொடித்த புண்ணிய நந்நபி யின்பொருட்டால்
கவலை யுறுபவம் பொறுத்தருள்வாய் ஹாதியாறப்பில் ஆலமீனே. 70

உவன முறுஞ்சீர் கருணைமழை வுலகுயிர்மேல் பொழியுஞான
தவனனெனுமருட் காதிறுவே தயையுற் றென்றும் நான்செய்த
பவம்பொறுத்து முகம்மதுவாம் பாக்யர்பொருட்டு பலனேங்கி
நவம்பெருகு சுவனமருள் நாயகாறப்பில் ஆலமீனே. 71

கதிபேகாட்டும் மறைநபிமார் களுக்குமுன்னிலை கருப்பொருளே
நிதிமுஹத்திமு வெனுமரிய நிமலானந்த நிட்களனே
துதிசேர் முகம்மதின்பொருட்டால் துன்பேயகற்றி நல்வரிசைத்
ததியீதருள்வாயெங்குநிறை தனியாறப்பில் ஆலமீனே. 72

பொன்றும் வாழ்வை நிலையென்று பொருந்தி மனது தடுமாறி
நின்ற வென்னை ரட்சித்தாள் நீதி பெருகு முக்ததிரே
பொன்று புறுக்கான் வேதமதைப் பூவில் விளையச் செய்தநபி
தன்னு லென்று மன்புடனே சாற்றுயாறப்பில் ஆலமீனே. 73

வன்மைபூண்ட நெஞ்சினர்க்கு வாகுற பின்னிலை யானதிரு
நன்மையாளமு அஹ்கிறெனு நாதனே நின்னரு மொளிபிரிந்து
குன்றிலிட்ட தீபமென்ன குவலயத்திடை யுதித்தநபி
வென்றி கொள்பொருட் பவம்பொறுப்பாய் மேதகுறப்பில் ஆலமீனே,

முன்னே மறையின் மொழியதுவால் முத்திநலத்தை காட்டிவிக்கும்
மன்னுமென்ன வேத்தனுடை மஹாதேவயா அவ்வனுவே
சொன்னே ரிலாநின் னெளிவிருந்து தொகுப்பாய் பூவில்வந்தநபி
தன்னின்பொருட்டென் பவம்பொறுப்பை சாற்றுயாறப்பில் ஆலமீனே.

வஞ்ச நெறிதனை மாற்றிநிதம் வணங்க வறியேன் மனத்தகத்து
தஞ்சமென்றேன் ஆஹிறெனுந் தயவே குர்றத் தைனியான
செஞ்சொலிறசூல் பொருட்டதுவால் சிறியேன்செய்த பவந்தீர்த்து
எஞ்சலில்லா சுவனமரு ளிறையா றப்பில் ஆலமீனே. 76

கருவினுருவாய் பிறந்தபல கனஞ்சேர் படைப்போ டெவையுநிறை
திருவின்பானே கணிக்கரிய தேவே லாகிறு வாம்பொருளே
அருவினுருவாய் புவிவந்த அண்ணல்முகம்ம தின்பொருட்டால்
தருவுலவுசீர் சுவனமருள் சாற்றுயா றப்பில் ஆலமீனே. 77

சொல்லு மரிய நெடுங்காலந் துதித்தே யுணவோ டுறக்கமின்றி
நல்ல நிலையாய் நிற்பவரும் நவிலு மமரர் நபிகளுக்கும்
வல்ல பத்தோ டொளித்ததிரு மஹதேவ யாபாத்தினும்வ
யெல்லாருன்கபி யின்பொருட்டு யெனையாள் றப்பில் ஆலமீனே. 78

இத்தனையென்று வெண்ணவொணு தென்பிழையாவை யும்பொறுப்பை
நித்தியனென்ன வெவையுமாட்சி நீதியாய்ச் செய்யும் யாவாலி
சத்திய வேதப் புறுக்கானை தரணியில் விளைநபி முகம்மதுவாஞ்
சுத்தரின் பொருட்டு வென்றுநனி சோதியா றப்பில் ஆலமீனே. 79

நல்லா ரிணக்க மிலாதுகொடு நாயே னெனப்பெய ரெடுத்துபவக்
கல்லைச் சுமந்தன் முத்தஆலி கணிக்குங் கணிதத் தடங்காதுன்
சொல்லைக் கொடுதீன் விளைத்தநபி துங்கமுகம்ம தின்பொருட்டால்
சொல்லு மரிய சுவனமருள் சோதியா றப்பில் ஆலமீனே. 80

நன்றியே மூமி னனவர்க்கு நட்பா யளிக்கும் நாயகனுப்
நின்றபா பர்று வெனும்பொருளே நீதிசேர் ஆத மாநபியின்
முன்னீ லுற்றுகிர் நின்றநூரும் முகம்மதர் பொருட்டு வென்றனுக்கு
என்றுமே கருணை பொழிந்தாட்சி யேகயா றப்பில் ஆலமீனே 81

தெரியாவகையாற் செய்பவமோடுதெரிந்துஞ் செய்பவமோ யெண்ணில்
பரிவாய்பொறுப்பை யெனவேண்ட பண்பாய்பொறுக்கும்யாதவ்வாபே
திரிலோ கமுஞ்சீர் பாடவன்று சீவனற்றோன் றனையெழுப்பு
மரிய நபிபொருட்டு பவம்பொறுப்பை யாதியா றப்பில் ஆலமீனே. 82

உண்மை நெறியை யிகலித்து வூடலிழைத்த வுன்மத்தர்
திண்மை யறவே நோவினைசெய் திருவே யாமுன் தக்கீஹாவே
கண்ணது விழந்த யகுதியன்சீர் கனமே தருமொளி யுறச்செய்த
வண்மை நபிபொருட்டு பவம்பொறுப்பாய் வளர்யா றப்பில் ஆலமீனே.

ஓவா துண்டு படுத்துறங்கி யுலகே யின்ப மெனவோம்பி
மூவா முதலென் றனைவணங்கா மூடன் பவமே யாஅபூவே
காவா கடனென் றரற்றுபூசலி கனமே பெறபரி வட்டமருள்
தேவா நபிபொருட்டு மன்னித்தாள் திருவே றப்பில் ஆலமீனே. 84

அருளுடை வள்ள லுனையன்றி அகிலத்தறியேன் அளக்கரிய
மருளுடை நாயே னைமீட்சி மகிழ்வுறச் செய்யும் மன்றலுபே
வெருளுடை யவருக் கன்பாக விதையீந்தால்துனி விலகச்செய்
தெருளுடை முகம்மது நபிபொருட்டு திருவார் றப்பில் ஆலமீனே 85

இறைக்கு மிறையா மாலிக்குல் முல்க்கே இடர்சேர் குலத்து ளெனையாக்காத், துறைக்கு ளாக்கு முபர்குலத்துள் தோன்றச்செய்த புண்ணியனே, பொறைக்கு ளிடரைதுமித்தநபி பூபர் முகம்மதின் பொருட்டால், நிறைக்கே யில்லருள் மாரிபொழி நீதியாறப்பில் ஆலமீனே. 86

தன்னிக ரில்லா துயர்ந்த கொடைதனையே யெவ்வக்குந் தானீந்து
இன்புறு யாதல் ஜலாலிவல் இக்ரு மென்னும் வள்ளலேசீர்
முன்பொருமாதின் காங்கரிய முன்னில் நிறுத்தி சுகம்பெறச்செய்
மன்னவர் முகம்மதின்பொருட்டு மகிழ்வருள் றப்பில் ஆலமீனே. 87

எண்ணில் புழுக்கள் செறிந்துநின்ற விப்பாழ்ங்கூட்டை யேசுமந்து
நண்ணும் வகையூறி யாதிடைந்தன் நவஞ்சேர் நீதியா முக்ஸிதுவே
புண்ணீர் சிந்த கல்லெறிந்த புன்மையாளர்தனை வருத்தும்
அண்ணல் நபிபொருட் டிரட்சித்தாள் ஆதியாறப்பில் ஆலமீனே. 88

பீழைசெறிந்த மாதர்மயல் பின்னி யிடைந்தன னென் றென்றும்.
ஊழி காலத் தெவையுமொன்று யுணர்வுறச் சேர்க்குஞ் ஜாமிஉவாம்
நூழை சேர்நாம வல்லோய் சீர் நுவலு நின்கபீபின்பொருட்டால்
எழை பவமே பொறுத்தாட்சி இலாகி றப்பில் ஆலமீனே. 89

எஞ்சலிலா தொளிர் சீமானே யிறையா முயினு வெனும் பொருளே
பஞ்சைமனச் சிறியேன்செய்த பாவ மலைபோ லிருந்திடினும்
செஞ்சொ லொளிநபி முகம்மதுவாந் தீட்சதர் பொருட்டு செய்பவமே
பஞ்சனஞ்செய் தருள்வையென்றும் பகர்யாறப்பில் ஆலமீனே 90

பந்தம துழன்ற நெஞ்சத்து பரிவுட னென்று யாகனிய்யு
விந்தைசேர்பரனேயுன்றன் விகசித சுவன நகரதனில்
சுந்தரமாக விருந்துபுவி தூய்மைபெருக வந்தநபி
அந்தமேவு பொருட்டுபவ மகற்றுயாறப்பில் ஆலமீனே. 91

மன்பதை யுயிர்கள் தனிநுட்டம் மகிழ்வுற முடிக்கும் யாமுகித்து
வென்னுமோர் நாமபெருங்கருணை யிறைவா நின்னொளிதனில்வந்த
நன்னிலே முகம்மது நபிபொருட்டால் நறுமண மேறுங் கற்பகஞ்சேர்
சொன்னருஞ் சுவன்ப் பதிதனில் சேர் சோதியாறப்பில் ஆலமீனே.

தீமை செய்வர் தங்களையே செவ்வணடக்கும் லாறு வெனும்
நாமத்தரிய பெரும்பொருளே நவினு நின்கபீ பின்பொருட்டால்
வீமமகற்றி முஸ்தகீமாம் மேலாம் பாலந்தனைக் கடத்தி
ஏமசுவர்க்கஞ் சேர்த்தருள்வாய் எங்கள்யாறப்பில் ஆலமீனே. 93

உய்யும் பொருட்டுன் திருப்புகழை யுரைக்கே னந்தமே யுரைக்கலாகாப்
பொய்யும் புலேயு மழுக்காறும் பொருந்து மனத்தன் யாநாமே
தூய்ய மணமே முங்குமேனி சோதிநபியார் பொருட்டாலே
வெய்ய பவமே பொறுத்தருள்வாய் மேதகுறப்பில் ஆலமீனே 94

உள்ளமெல்லாம் புளகமெழ வுவந்தா நந்தமுற்றபெரும்
வள்ளலென்னப் புகழ்பாடும் மஹாதேவ யாநாபிஉவே
தெள்ளியதில்சீர் முரசறைய துதியோர் மதிநு வீற்றநபி
தெள்ளிற்பொருட்டு பவம்பொறுப்பாய் திருவாறப்பில் ஆலமீனே. 95

தீமைகளெல்லாந் தொலேத்துவிட்டித் தினத்தினி லிருந்துவுயர்வுபெறு
வாமமே பெருகு நேர்வழியை வகுப்பாய்க்காட்டும் யாஹாதி
பாமாருற்ற பதுரதனில் பகர்மண் கொண்டு வெற்றிகொண்ட
சீமமா நபிபொருட் டென்பிழை தீர்நிகரில் றப்பில் ஆலமீனே. 96

அற்புதக் கோலங்கொள் படைப்பனைத்து மணிபெறப் படைத்துக் காத்திடுஞ்சீர், தற்பரா னந்தசிற் பரப் பொருளாய் தணிவிலாதுயர்ந்த யாபதீவு, வெற்பொடுமேறையை வசனித்த விகசித நந்நபிபொருட்டாலே, அற்பனின் பவமே பொறுத்தருள்வை ஆதியா றப்பி ஆலமீனே. 97

வநாள்கழிக்க வுடலெடுத்தே னணிபெற நின்னைத் தொழுதறியேன்
அமினன் பிழைபொறுப்பைப் படைப்புகளற்ற பின்னுஞ்சீர்
பவநாமமறை வாறிதே நபிகள் சிரோன்மணி முகம்மதுவாஞ்
நவநாம முற்றும்பொருட்டு துதியோர் றப்பில் ஆலமீனே. 98

சுவனநாட் டாசர் த... யேகப் பெரும்பொரு ளாய்நிறைந்து
எங்கு நிறைந்து நீக்கமின்ற மகிழ்வா யுனதரிய
மங்கலஞ்சேர் பாகியெனு மன்னே...முகம்மது நபிபொருட்டால்
துங்க வொளிவதிற் பிரிந்துவந்த ...ப்பில் ஆலமீனே. 99

சங்கையாளரோ டென்னையுஞ்சேர் ...

ஆணுமென்னு மிருட்டறையி லகப்பட்டிடைந்துமே வென்னுந்
தாணுமே யுனைவணங்கா திடைந்தன் ததிநேர்வழிகாட்டும் றஷீதே
சேணுல கிருந்து புவிவந்த திருநபி யாசீன் பொருட்டாலே
மாண்பே முற்றிட வருள்புரிவாய் மன்யாறப்பில் ஆலமீனே. 100

அந்தமு மாதியு மில்லாது அகமும் புறமுங் கடந்துபெரு
விந்தையாய்வீற்ற யாசபூரே வேதநாயக முகம்மதுவால்
எந்தன் பிழைகளெலாம்பொறுத்து வினிய கற்பகத் தருவல்லவு
சுந்தரம் பிருதவுசிற்சேர் சொல்லுபா றப்பில் ஆலமீனே. 101

கற்பனை சாருங் கவிப்பிழையுங் கவிஞன் யானறி யாப்பிழையும்
விற்பன ரென்மித் திரர்பிழையும் மேலோர் மரபினர் வாசிப்போர்
அற்புத மாயா வர்பிழையும் அகுமது நயினர் பொருட்டாலே
இப்புவிமீது பொறுத்தருள்வை இலாஹிறப்பில் ஆலமீனே. 102

நூறு திருநாம முனாஜாத்துமாலை

ஸம்பூரணமாயிற்று.

---

## முக்கியகவனிப்பு.

---

மஹாவல்லமைக்கடவுளாகிய அல்லாகுத்தாலாவின் வரிசைதங்கிய இந்த நூறு திருநாம முனாஜாத்து மாலையை முடியவாசித்து வருகிற கனந்தங்கிய நமது முஸ்லிம் நண்பர்களுக்கு ஒருமுக்கியமான தெரிவிப்பாவது:—இதை வெள்ளி, திங்கள் இரவுகளில் வாசனைப்புகரிட்டு துப்புறவாக இருந்துகொண்டு இதிலடங்கிய கவிதைகள் நூற்றையும் தவறுமல் வாசித்து எந்த ஒருநாட்டத்தைப்பற்றியும் றகுமானிடம் முனாஜாத்து தேடும்பக்ஷத்தில் அது அக்ஷணமே நிறைவேறிவிடும். ஆனால் உறுதியான இருதயத்துடன் இருக்கவேண்டும். இதற்குப்பிறகும் இன்னும் நமமுஸ்லிம்களுக்கின்றியமையாத தரிசன வேட்கைமாலை முதலான அரிய பிரபந்தங்களும் கூடியசீக்கிரம் அச்சிட்டு வெளிப்படுத்தப்படும். இன்ஷா அல்லாஹ்.

இங்ஙனம்.

☞ ம. கா. ஷெய்கப்துல்காதிறு.

நூலாசிரியன்.